[30th March 1961

(இ) அவற்றை நம் மாநில சர்க்கார் ஏற்றுக்கொண்டுள்ளார்களா?

(உ) அப்படியானால் அதை நிறைவேற்ற என்ன செய்யப்பட்டிருக்கிறது?

(எ) இதனால் சர்க்காருக்கு ஆகும் அதிகச் செலவு எவ்வளவு?

(ஐ) இதில் மத்திய அரசாங்க நிதி உதவிக்கு வகை உண்டா? அதன் விவரமென்ன ?

(ஒ) இதை அமுலுக்குக் கொண்டுவருவதில் உதவ இக்கமிட்டித் தலைவர் ராஜா சுரேந்திர சிங் இம் மாநிலம் வரத் திட்டமுண்டா? அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*c*) The report of the Agricultural Administration (Nalagarh) Committee containing a large number of recommendations, has been received by this Government. The recommendations have been examined by the Government with reference to the conditions obtaining in this State and it is found that most of the recommendations are already in vogue in this State. In respect of certain recommendations requiring implementation, proposals have been received from the Director of Agriculture and they are under examination.

(*d*) The details of expenditure could be arrived at only after the scheme under consideration are finalised.

(*e*) The Government of India have agreed to meet 50 per cent of the expenditure during 1960–61 and 1961–62 and the assistance on this pattern would cease from the year 1962–63 onwards. But, they have agreed to make specific request to the Finance Commission to take into account this expenditure on account of implementing these recommendations while allocating assistance to this State.

(*f*) Yes. Sri Raja Surendra Singh wrote to the Minister for Home in April 1960 that he would visit this State to discuss the proposals regarding implementation of the recommendations of the Argicultural Administration (Nalagarh) Committee. Further intimation regarding his exact date of visit to this State is awaited.

SRI A. VEDARATHNAM : இந்த நலாகர் கமிட்டி இப்போது நம் மாநிலத்தில் உள்ள விவசாய இலாகாவில் என்ன என்ன முக்கியமான குறைபாடுகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்? அவற்றை நீக்க அவர்கள் என்ன என்ன சிபாரிசு செய்திருக்கிறார்கள் என்று அறிவிக்க முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த மாகாணத்தைப் பொறுத்த மட்டில் அவர்களுடைய சிபார்சுகள் அநேகம் ஏற்கனவே நிறைவேற்றப்பட்டு வருகின்றன. பெரிதாக ஒன்றும் குறைபாட்டைக் கண்டுபிடிக்கவில்லை.

*Dam across Agniar*

* 1215 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether the proposal to construct a dam across the Agniar in Alangudi taluk, Tiruchirappalli district, will be included in the Third Five-Year Plan?

30th March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A proposal to construct an anicut across Agniar in Alangudi taluk, Tiruchirapalli district, is under examination by the Chief Engineer (Irrigation). The scheme may be taken up for implementation, if feasible, under the Special Minor Irrigation Programme in the Third Five-Year Plan.

SRI V. ARUNACHALA THEVAR : 1949-ம் வருஷத்தில் கனம் அமைச்சர் அவர்கள் அங்கு வந்து அக்கினி ஆற்றைப் பார்வையிட்டு திட்டத்தை பரிசீலனை செய்ய உத்திரவிட்டார்கள். 1955-ம் வருஷ கடைசியில் திருச்சி ஜில்லா கலெக்டர் ஆபீசில் ஜில்லா அங்கத்தினர்களைக்கூட்டி ஒரு கூட்டம் நடத்தி என்ன நடவடிக்கை எடுக்கப்படும் என்பதைப்பற்றி கிராம மக்களுக்கு தெரிவித்தார்கள். இதை நிறைவேற்றத் தாமதம் ஏற்பட்டதினால் இதை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது உடனடியாக எடுத்துக்கொள்வார்களா? ஏன் இவ்வளவு தாமதம் என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திட்டம் நன்கு பரிசீலிக்கப்பட்டு சீக்கிரத்திலே எடுத்துக்கொள்ளப்படும் என்று எதிர்பார்க்கிறேன்.

### *Group clerks in Panchayats*

* 1216 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிராம பஞ்சாயத்து போர்டுகளில் வேலை செய்து வரும் குரூப் கிளார்க்குகளின் வேலையை கிராம மணியக்காரர்களிடம் ஒப்படைக்கப் போவது உண்மையா ?

(இ) குரூப் கிளார்க்குகளுக்கு வேறு என்ன வேலை கொடுப்பதாக உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (i) The work of collection of taxes has been ordered to be transferred to the Village Headman and that of maintenance of related accounts to Karnams. The Group Clerks may be continued to be employed for performing secretarial work of the Panchayats if the latter so desire.

(ii) It has been ordered that if the post of a Group Clerk-cum-Bill Collector is abolished as a result of giving effect to the orders of the Government, the incumbent should be absorbed as an attender or a clerk (according to his qualifications) in the establishment of the Panchayat Union.

SRI A. GOVINDASAMI : இப்போது கிராம கர்ணத்திற்கு வேலையிருக்கும்போது பஞ்சாயத்து வேலையையும் ஒப்படைக்கப்பட்டிருப்பது சரியா? இதனால் அவர்கள் செய்யும் வேலைக்குக் குந்தகம் ஏற்படாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கணக்கிலே ரெவின்யூவும் சேர்ந்திருப்பதனாலே ஒன்றும் குந்தகம் ஏற்படாது.

SRI A. GOVINDASAMI : நாம் பஞ்சாயத்து சட்டம் ஏற்றுக்கொண்டபோது நிர்வாகத்தில் இப்படி உத்திரவு பிறப்பிக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ரெவின்யூ இலாகா மூலமாக இதன் வரி வசூல் செய்யப்பட்டுவருகிறது. அதனால் இந்த முடிவு எடுக்கப்பட்டது. ரெவின்யூ இலாகா என்று சொல்லும்போது, கர்ணம், வில்லேஜ் ஹெட்மான் எல்லாம் சேர்ந்திருக்கிறார்கள்.